27th March 1961]

SRI A. VEDARATHNAM : மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டக் காலத்தில் இதையெல்லாம் வன விலங்கு சரணாலயங்களாக எடுத்துக் கொள்ளவேண்டுமென்றால் இப்பொழுதே அதற்கான பூர்வாங்க வேலைகள் நடைபெற வேண்டுமே, அவை ஏதாவது நடைபெற்று வருகிறதா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அதுதான் உத்தேசம். இப்பொழுது பூர்வாங்க வேலைகள் நடைபெற்றுக்கொண்டு வருகிறது. இது விஷயத்தில் 1,05,000 ரூபாய் கூட ஒதுக்கப் பட்டிருக்கிறது.

SRI N. K. PALANISAMI : May I know whether there was a proposal to start a sanctuary in the Kanyakumari district and if so, whether that proposal has been dropped?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : முத்துக்குழிவயல் என்று சொன்னேனே, அது கன்னியாகுமரியைச் சேர்ந்ததுதான்.

SRI N. MARUDACHALAM : கோவையில் ஒரு வன விலங்கு சரணாலயம் எடுத்துக்கொள்ள முடியுமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : எவ்வளவோ எடுத்துக்கொள்ளலாம். இப்பொழுது நான்கு எடுத்துக் கொள்ள உத்தேசம்.

*Bill-collectors (promotion)*

* 1110 *Q.*—SRI S. M. ANNAMALAI : கனம் ஸ்தல ஸ்தாபன அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) வட ஆற்காடு மாவட்டம், ஆரணி நகராட்சி மன்றத்தில் பில் கலெக்டர்களின் உத்தியோக உயர்வு குறித்தும், இன்னும் சில சலுகைகளைக் குறித்தும் 1960-ம் ஆண்டு டிசம்பர் மாதம் 29-ம் தேதியில் நகராட்சி மன்றத்தால் நிறைவேற்றிய தீர்மானம் கிடைத்ததா ?

(இ) அப்படியாயின், அதன்மீது எடுத்துக்கொண்ட நடவடிக்கை என்ன ?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : (அ) No such resolution has been received by Government.

(இ) The question does not arise.

*Dealers in old bottles (sales tax)*

* 1111 *Q.*—SRI V. K. KOTHANDARAMAN : கனம் கைத்தொழில் அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) கோயம்புத்தூர் பழைய மார்க்கெட் வியாபாரிகளின் சங்கச் செயலாளர் அவர்களின் 20—1—1961 தேதியிட்ட பழைய பாட்டில் (old scrap bottles) வியாபாரிகள் மீது விதித்துள்ள விற்பனை வரியை ரத்து செய்யும்படி கோரிய மனு கிடைத்ததா ?

(இ) அதன்மீது எடுத்துக்கொண்ட நடவடிக்கை என்ன ?

THE HON. SRI R. VENKATARAMAN : (அ) Yes, Sir. But the petition is dated 22nd December 1960.

( ) The representations are under the consideration of the Government.

SRI V. K. KOTHANDARAMAN : பழைய பாட்டில்களை அரை அணா, ஒரு அணா என்று வீதிகள் எல்லாம் சுற்றி வாங்கி விற்பனை செய்யக்கூடிய தொழில் இது. ஆகவே இப்படிப்பட்ட ஏழை மக்கள் பேரில் கூட வரி விதிப்பது கன்ஸிடரேஷனில் இருப்பதாக சொன்னார்கள், அது வரவேற்கத்தக்கது. ஆகவே தயவுசெய்து கண்டிப்பாக ஏப்ரல் முதல் தேதியிலிருந்தாவது அதை தள்ளு படி செய்ய ஏற்பாடு செய்யப்படுமா ?

THE HON. SRI R. VENKATARAMAN : இதைப் பற்றிய அமெண்ட்மான்ட் இன்று வருகிறது. அப்பொழுது சொல்லலாம்.

DEPUTY SPEAKER : அதைப் பற்றிய மசோதா கூட வருகிறது.

*Growing of trees on the hills (Vellore)*

* 1112 Q.—SRI N. R. THIAGARAJAN : கனம் உள்துறை அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

வேலூர் அருகேயுள்ள மலையில் மரம் வளர்க்கும் உத்தேச முண்டா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : Yes, Sir.

SRI S. M. ANNAMALAI : வேலூர் அருகில் மலைகள் இரண்டு மூன்று இருக்கின்றன. எந்தெந்த மலைகளில் எந்தெந்த மரங்கள் வளர்க்க முயற்சி செய்து வருகிறார்கள்.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : வேலூர் நகரசபை கேட்டார்கள். போர்ட் ஹில், கோட்டை மலை என்று இருக்கிறது. மொத்த விஸ்தீரணம் 1,206 ஏக்கர் இருக்கிறது. அதில் 9 விதமான செடிகளை வைத்து வளர்க்க உத்தேசம்.

SRI V. K. KRISHNAMURTHY : வேலூர் கோட்டை மலையில் மரங்கள் வளர்ப்பது பற்றி 1958-ல் வன இலாகா அதிபர் அவர்கள் சிபார்சு செய்தார்கள். எப்பொழுது அதை ஆரம்பிக்க அரசாங்கம் ஆணையிடும் ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அதுதான் இப்பொழுது சொன்னேன். சீப் கன்ஸர்வேட்டர் என்னென்ன செய்வது என்பது பற்றி ப்ரபோஸல்ஸ் அனுப்பியிருக்கிறார். மேற்கொண்டு அவை எடுத்துக்கொள்ளப்படும்.